நாம் போகவேண்டும். அந்த முறையில்தான் செய்யப்படுகிறது. எனக்குத் தெரியும். ஏதோ ஒரு பகுதியிலே மாத்திரம் இந்தத் திட்டம் இருப்பது அல்ல. வாலாஜா தாலூகா, வேலூர் தாலூகா என்று இப்படி எல்லாத் தாலூகாக்களிலும் இருக்கிறது.

**Sri S. M. ANNAMALAI** : மாவட்டக் கவுன்சில் கூட்டங்கள் நடக்கின்ற போதாவது இப்படிப்பட்ட முக்கியமான விஷயங்கள் வரும்போது அவைகளை அங்கேவைத்து, சட்ட மன்ற உறுப்பினர்கள் என்ன என்ன யோசனைகள் சொல்கிறார்கள் என்பதையாவது கேட்டு, அவர்களுடன் கலந்து கொள்ளக் கூடாதா ?

**The Hon. Sri M. A. MANICKAVELU** : இதற்கு யோசனை முக்கியமாக சுகாதார இலாகா மூலமாக வருவது அவசியம்.

**Sri A. A. RASHEED** : Sir, is the Hon. Minister aware that in many villages foundations for overhead tanks have been laid even nine months back, but work has not yet been completed?

**The Hon. Sri M. A. MANICKAVELU** : I cannot say 'many places'; may be, in some places; they are being looked into.

**Sri S. RANGANATHA MUDALIAR** : Has this scheme been extended to other district, and if so, to what other districts?

**The Hon. Sri M. A. MANICKAVELU** : As I said, originally it was applicable only to five districts; it has been extended to two or three districts more.

**Sri K. B. S. MANI** : இவைகளுக்கு "டைனல் அதாரிடி" சுகாதார இலாகா அதிகாரிகளாக இருந்தபோதிலும், எம்.எல். ஏக்கள் அந்தக் கவுன்சிலிலே குறிப்பிடுகிற கிராமங்களில் பரிசீலனை செய்து, அவர்கள் சொல்வது சரியா என்று பார்த்து, அந்தக் கிராமங்களில் இந்தத் திட்டத்தைக் கொண்டு வருவதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

**The Hon. Sri M. A. MANICKAVELU** : கனம் அங்கத்தினர்களுக்குச் சில கிராமங்களிலே இத் திட்டம் அவசியமாகத் தெரிந்தால், தொத்து நோய் வராமல் தடுப்பதற்கு யோசனை சொல்வதற்குத் தடை இல்லை.

**Sri S. M. ANNAMALAI** : இந்த தேசிய குடி தண்ணீர் திட்டம் ஆரம்பிப்பதற்கு என்னென்ன அம்சங்கள் இருக்கவேண்டும் ? அதாவது அந்தத் திட்டம் ஆரம்பிப்பதற்கு ஒரு கிராமத்தில் எவ்வளவு மக்கள் தொகை இருக்கவேண்டும் என்று சொல்ல முடியுமா ?

**The Hon. Sri M. A. MANICKAVELU**: காலரா, டைபாய்டு, அம்மை இம்மாதிரியான தொத்து நோய் வரக்கூடிய பிராந்தியம் எங்கே அதிகமாக இருக்கிறதோ அங்கெல்லாம் இந்தத் திட்டம் ஆரம்பிக்கப்படும். 5,000 ஜனத்தொகைக்கு உள் அடங்கி இருக்கிற கிராமத்தில்தான் ஆரம்பிக்கப்படும். 5,00 -க்கு மேலே ஜனதொகை உள்ள கிராமங்களுக்கு இந்தத் திட்டம் இல்லை.

*Village Hospitals*

* 523 Q.—**Sri P. G. MANICKAM** : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) எல்லாவித முறைகளையும் கொண்ட வைத்தியசாலைகளை கிராமங்களிலே அமைப்பதற்கான திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவருவது பற்றி திட்டக் கமிஷனின் அறிக்கையானது நம் மாகாண சர்க்காரின் பரிசீலனைக்கு அனுப்பப்பட்டதா ?

8th September 1960]

(ஆ) அவ்வாறு அனுப்பப்பட்டிருப்பின், அதன்மீது நம் மாகாண சர்க்காரால் எடுக்கப்பட்ட நடவடிக்கைகளின் விபரங்கள் யாவை ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) The answer is in the negative.

(*b*) Does not arise.

SRI P. G. MANICKAM : சிறந்த வகையாகக் கருதப்படும் எல்லாவித நாட்டு வைத்திய முறைகள் கொண்ட ஆஸ்பத்திரிகளை கிராமங்களில் ஏற்படுத்துவது நல்லது என்று திட்டக் கமிஷன் கூட்டத்தில் விவாதிக்கப் பட்டதாகத் தெரிய வருகிறது. அவ்வாறு விவாதிக்கப்பட்டிருந்தால், அது விஷயமாக மேற்கொண்டு திட்டக் கமிஷனிடமிருந்து நமது சர்க்காருக்கு ஏதாவது அறிக்கை வந்திருக்கிறதா? அவ்வாறு அறிக்கை வந்திருக்குமானால், அதன் மீது எடுக்கப்பட்டிருக்கிற நடவடிக்கைகள் யாவை ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இது விஷயமாக ஏற்படுத்தப்பட்ட கமிட்டி " சென்ட்ரல் வொர்கிங் குரூப் ஆப் ஹெல்த் " இம்மாதிரியாக கிராமங்களில் வைத்திய வசதி ஏற்படுத்த வேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். ஆனால் இப்போது " பிரைமரி ஹெல்த் சென்டர்கள் " ஏற்படுத்துவது என்ற திட்டத்தின் கீழ், 60,000, 70,000 ஜனத்தொகை கொண்ட ஒரு பிராந்தியத்தில் ஒரு பிரைமரி ஹெல்த் சென்டரும், அதைச் சுற்றி 3 சப் சென்டர்களும் ஏற்படுத்துவதுதான் இப்பொழுது திட்டம். அந்தத் திட்டம் தான் இப்பொழுது நடை முறையில் இருந்து கொண்டு வருகிறது.

SRI P. G. MANICKAM : நாட்டு வைத்தியத்தில் சிறந்த முறைகளாக கருதப்படும் வைத்திய வசதிகளை பிரைமரி ஹெல்த் சென்டர்களில் வைத்து அது பொது ஜனங்களுக்கு உபயோகப்படும்படி செய்வதற்குரிய நடவடிக்கை சர்க்காரால் எடுக்கப்படுமா ?

THE HON. SRI M. A, MANICKAVELU : அப்படி சிறந்த வைத்திய முறைகள் நாட்டு வைத்தியத்தில் இருந்தால், அதற்குத் தனியாகத் தான் ஏற்பாடு செய்யவேண்டும். பிரைமரி ஹெல்த் சென்டரில் அதைச் செய்வதற்கு இல்லை. ஏனென்றால் அது மேல் நாட்டு வைத்திய முறைப் பிரகாரம் அமைந்து இருக்கிறது. மேலும் அயல் நாட்டு உதவி அதற்கு கிடைக்கிறது. அங்கே ஜி.ஸி.ஐ.எம். டாக்டர்கள் கூட போடக் கூடாது. எம்.பி., பி. எஸ். டாக்டர்களைப் போடவேண்டுமென்ற நிபந்தனை இருக்கிறது.

SRI N. R. THIAGARAJAN : புதியதாக ஏற்படுத்தப்படும் வைத்திய வசதிகள், படுக்கைகள் விஸ்தரிப்பது இவையெல்லாம் பெரிய நகரங்களிலேயேதான் நடந்து கொண்டிருக்கின்றன. அது பற்றி 3, 4 ஆண்டுகளாக எடுத்துக் கூறியும், அந்த முறை திருந்தின பாடு இல்லை. கிராமப் புறங்களில் வைத்திய வசதிகளை அதிகரிக்கவேண்டுமென்ற முறையில், இம்மாதிரி வைத்திய வசதிகளை விஸ்தரிப்பது, படுக்கைகளை அதிகப்படுத்துவது போன்றவைகள் தாலுகா தலைமை நகரங்களிலும் கிராமங்களிலும் செய்யப்படுமா ? இந்த ஆண்டிலாவது அம்மாதிரி செய்வதற்கு சர்க்கார் முன் வருவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்பொழுது நடை முறையில் இருக்கும் திட்டம் தலைநகரம், ஜில்லா தலைநகரம் ஆகிய இடங்களைத் தவிர தாலுகா தலைநகரங்களிலும் மற்ற இடங்களிலும் படுக்கைகளை அதிகப்படுத்துவது போன்ற வசதிகளைச் செய்துகொடுக்கும் முறையில் தான் அமைந்திருக்கிறது. தாலுகா தலைமை ஆஸ்பத்திரிகளில் 40, 50 படுக்கைகள் இருந்த இடங்களிலெல்லாம் இப்பொழுது அதிக அளவில் அதிகப்படுத்திக்கொண்டு வருகிறோம். அதன் முழுப் பலன் சில மாதங்களுக்குப் பிறகோ அல்லது ஒன்றிரண்டு வருடங்களிலோ தான் தெரிய வரும். எங்கேயோ ஒரு மூலையில் நடக்கும் திட்டம் எல்லா இடத்திலும் தெரியாது. கோவையில் நடக்கும் திட்டம் மதுரை அங்கத்தினருக்குத்

தெரியாது. மதுரையில் ஏற்பட்டால்தான் அவருக்குத் தெரியும். கொஞ்சம் கொஞ்சமாக விஸ்தரிப்பு நடந்துகொண்டிருப்பது அவருக்குத்தெரியும்.

*Wells*

MR. SPEAKER : The hon. Member, Sri Nagaraja Monigar, is not in his seat. The question and answer will be printed in the proceedings.

* 534 Q.—SRI S. NAGARAJA MONIGAR : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether people are prohibited from digging wells by the sides of Project Irrigation Channels in the State;

(b) if so, on what basis and on what authority; and

(c) whether it is a fact that digging of drinking water wells are also prohibited?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) Permission of Government is required for sinking wells subject to the condition that the wells should be two furlongs away on either side from the main channel and one furlong from the distributaries.

(b) This is on the basis of technical opinion regarding the level of the water table and to have control over the crop pattern under the project.

(c) No specific orders prohibiting the digging of drinking water wells have been issued by Government.

*Poramboke lands*

* 535 Q.—SRI V. K. RAMASWAMY MUDALIAR : Will the Hon. the Minister for Revenue be pleased to state whether the Government propose to assign poramboke lands to those who have been encroaching on them for over 12 years by paying fines in Tiruvallur taluk?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

*Drug Control Act*

* 536 Q.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Revenue be pleased to state the number of persons arrested and prosecuted under the Drug Control Act in Madras City in 1959-60?

THE HON. SRI M. A. MANICKAVELU : Persons are not generally arrested for offences under the Drugs Act, but prosecutions are resorted to in suitable cases. During 1959-60, seven such prosecutions were launched.